# பகவத் பாதை




Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

பாதை - 1 | 2012 / ஜுன் | மலர் - 9

தனிச்சுற்றுக்கு மட்டும்




Sri Bagavath

உங்களை அப்படியே ஏற்றுக்கொண்டு உங்களை எதிர்த்துப் போராடாமல் இருந்தால் நீங்கள் அனைவரும் இப்பொழுதே ஞானிகள்தாம்.

– ஸ்ரீ பகவத்



## அமானுஷ்யம்?

- ஸ்ரீ பகவத்

திருவண்ணாமலையில் ஒரு வருட காலம் தங்கியிருந்தேன். அப்போது திருவண்ணாமலையைச் சேர்ந்த அன்பர் ஒருவர் நம்மைச் சந்திக்க வந்தார். அவர் வந்தபோது நான் வேறு பணியாயிருந்ததால் அவர் அரைமணி நேரம் காத்திருந்தார். அந்நிலையில் அவர் நமது புத்தகங்கள் சிலவற்றைப் புரட்டிப்பார்த்துக் கொண்டிருந்தார்.

எனது பணியை முடித்துக்கொண்டு அவரை விசாரித்தேன். அவர் தன்னை ஓர் 'ஆன்மீக ஆராய்ச்சியாளர்' என்று அறிமுகப்படுத்திக்கொண்டார்.

அவர் தனக்குக் கொடுத்துக்கொண்ட அடைமொழி சற்று வித்தியாசமாக இருந்தது. அவருடைய ஆய்வைப்பற்றிக் கேட்டேன். அவர் தனது ஆய்வைப் பற்றிக் கூறினார்.

"நான் அடிப்படையில் நாத்திகக் கருத்தை உடையவன். கடவுள், தெய்வங்கள், சித்தர்கள், பேய், பிசாசுகள், மந்திரதந்திரங்கள் இவற்றை நான் நம்புவது கிடையாது. ஆனாலும் அவற்றில் உண்மை ஏதாவது உள்ளதா என்று மட்டும் ஆய்வு செய்து வந்தேன்...

"அமானுஷ்ய சக்தி உள்ளதாகக் கூறப்படுபவர்களை எல்லாம் சந்தித்து அதுபற்றி விசாரித்தேன். அவர்கள் அனைவரும், தாங்கள் பயிற்சி செய்து தான் அபூர்வமான ஆற்றல்களைப் பெற்றதாகவும், நானும் பயிற்சி செய்தால் சித்தர்களையும், தெய்வங்களையும் பார்க்கமுடியும் என்றும் கூறினார்கள். கருத்துகளை மட்டும் ஆராய்ச்சி செய்தால் எதையும் கண்டுபிடிக்க முடியாது என்று கூறி விட்டார்கள்.

"நானும் அதனை ஒரு சவாலாக ஏற்று அவர்கள் கற்றுத் தந்த பயிற்சிகளான தியானம், ஜபம் ஆகியவற்றை ஆராய்ச்சி மனப்பான்மையுடன் செய்து வந்தேன்.

"அவர்கள் கூறியது போல், தெய்வங்கள், சித்தர்கள் போன்றோரை என்னாலும் பார்க்க முடிந்தது. சாதாரண மனிதர்களால் அறிய முடியாத ஒளி, ஒலி ஆகியவற்றை அறிய முடிந்தது. சில மரங்களிலிருந்தும், சில பாம்புகளிலிருந்தும் விசேஷமான ஒளி ஏற்படுவதை என்னால் பார்க்க முடிந்தது. நான் எவற்றை எல்லாம் பார்க்க முடிந்ததோ, அவற்றையெல்லாம், எனக்கு அருகாமையில் இருப்பவர்களுக்கும் காட்டமுடிந்தது.

"நான் இங்கே உட்கார்ந்திருந்தபோது உங்கள் நூல்கள் சிலவற்றை மேம்போக்காகப் பார்த்தேன். வாழ்க்கையை எளிமையாக ஏற்றுக்கொண்டு அமைதியான வாழ்வை மேற்கொள்ளவேண்டும் என்று கூறியிருந்தீர்கள். எனது ஆய்வைப் பற்றியும், எனது அனுபவங்களைப் பற்றியும் என்ன எண்ணுகிறீர்கள்?"

அவர் தன்னைப் பற்றிக் கூறி நமது அபிப்பிராயத்தையும் கேட்டார். "உங்களது அனுபவம் எவையும் பொய்யானதல்ல. இத்தகைய அனுபவங்களைப் பலரும் கூறக் கேட்டிருக்கிறேன். எனக்கு அத்தகைய அனுபவங்கள் எவையும் கிடையாது. எனக்கு அவற்றில் ஆர்வமும் கிடையாது. வாழ்வை எளிமையாக அமைத்துக் கொள்வதே போதுமானதாகக் கருதுகிறேன்" - இவ்வாறு கூறினேன்.

அவர் சற்று நேரம் அமைதியாக இருந்துவிட்டு கேள்வியொன்றை எழுப்பினார்.

"தெய்வங்களோ, சித்தர்களோ கிடையாது என்று கூறிவந்தேன். பிறகு அவர்கள் இருப்பதையும் கண்டுகொண்டேன். இப்போது எனக்கு இன்னுமொரு கேள்வி உள்ளது. அவர்கள் இருப்பது உண்மைதான். ஆனால் அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? ஜாலியன் வாலாபாக்கில் ஜெனரல் டயர் ஆயிரக்கணக்கானவர்களைச் சுட்டுக்கொன்றான். இப்போதும் உலகத்தில் எத்தனையோ அராஜகங்கள் நடந்து வருகின்றன. இந்த சித்தர்களும், தெய்வங்களும் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? ஏன் அவர்கள் இந்தப் பிரச்சினைகளில் தலையிடுவதில்லை?"

அவர் இவ்வாறு கேட்கவும் நமது தரப்பில் சிலவற்றைக் கூற நேர்ந்தது. "நமது சாஸ்திரங்களில் இரண்டுவித நிலைப்பாடு உள்ளது. அதில் ஒன்று என்னவென்றால், 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது. அவன் ஆட்டுகிறான். நாம் ஆடுகிறோம்'. இப்படிக் கூறப்படுகிறது. அனைத்தும் இறைவன் செயல் என்று கூறுவோமானால், அனைத்துக் கொடுமைகளுக்கும் காரணம் இறைவனே. ஆனால் இது சரியான அணுகுமுறையாகத் தெரியவில்லை..

"சாஸ்திரங்களின் இரண்டாவது நிலைப்பாடு என்னவென்றால், 'அனைத்தும் கர்ம வினையை அடிப்படையாகக் கொண்டே நடக்கின்றது. அவரவர் செய்த கர்மத்தின் பலனை அவரவரே அனுபவித்து ஆகவேண்டும். கர்மத்தைச் செய்யும் முழுச்சுதந்திரம் மனிதருக்குக் கொடுக்கப்பட்டு உள்ளது. கர்மாவுக்கு உரிய பலனை உயிர்களிடம் கொண்டு சேர்க்கும் பணியை மட்டுமே தெய்வங்கள் ஏற்றுக் கொண்டுள்ளன. இது இரண்டாவது நிலைப்பாடு.

"ஆகவே நல்ல விளைவுகளை அடைய விரும்புபவர்கள் அனைவரும் நல்ல கர்மாக்களை செய்திடக் கடமைப்பட்டவர்களே ஆவர். ஒவ்வொருவரும் அகத்திலும், புறத்திலும் நல்ல வாழ்வை வாழக் கடமைப்பட்டவர்களே. நாம் நமது அகத்தைப் பொறுத்த அளவில் எதையும் செய்திடத் தேவையில்லை. அங்கு நாம் எதையும் செய்யாதிருந்தால் அது தாமாகச் சரியாகிவிடுகிறது. புறத்தைப் பொறுத்த அளவில் நற்கருமங்களைச் செய்திட நாம் கடமைப்பட்டவராவோம். நமது நல்ல செயல்கள் மூலமாகவே நமது வீடும், நாடும் சுபிட்சமடையமுடியும். அகத்தைப் பொறுத்து நல்லது கெட்டது கிடையாது. புறத்தைப் பொறுத்து நல்லது கெட்டது உண்டு. மனத்தைப் பொறுத்து தேவையானது, தேவையற்றது என்று எதுவும் கிடையாது; புறத்தைப் பொறுத்து இவை இரண்டுமே உண்டு. அகத்தில் செயலற்றிருக்க வேண்டும்; புறத்தில் செயலோடிருக்கவேண்டும். அகத்தைப் பொறுத்த அளவில் எந்தத் தேவையும் இல்லாமல், தாமாக என்னென்ன உணர்வுகள் ஏற்படுகின்றனவோ அவற்றைத் தாமாக ஏற்பட அனுமதித்து, கள்ளங்கபடமில்லாமல் இருப்பது தான் சரியான நிலை. புறத்தைப் பொறுத்த அளவில், பொறுப்பாகச் சிந்தித்து, திட்டமிட்டு நல்ல வாழ்வை அமைத்திடுவதுதான் சரியான நிலை. ஞானநிலை என்பது, 'மனதைச் சீரமைக்கத் தேவையில்லை' என்பதைப் புரிந்து கொள்வதே.

"அஷ்டவக்ர கீதையில் ஞானியின் லட்சணம் பற்றிக் கூறப்படுகிறது. 'ஒருநாள் சூரியன் திடீரென சந்திரனாக மாறிக் குளிர்ந்தாலும், சந்திரன் ஒருநாள் திடீரென சூரியனாக மாறி சுட்டெரித்தாலும் ஞானி ஆச்சரியப்படமாட்டான்'. அதையும் சகஜமாகவே ஏற்றுக்கொள்வான். இது அகத்தைப் பொறுத்தது. அக உணர்வுகள் அனைத்தையும் சகஜமாக ஏற்றுக்கொள்வது தான் ஞானநிலை....

"அகத்தைப் பொறுத்த அளவில் நமக்கு எந்தவிதமான நிலைப்பாடுமே இருக்கக்கூடாது. 'நான்' என்னும் அனுபவமுங்கூட தற்காலிகமாக, வினாடிதோறும் புதிதுபுதிதாக வந்துசெல்லும் அனுபவமே. அமானுஷ்யமான சக்திகள், சித்திகள் ஆகியவற்றின் மீது கொள்ளும் ஆர்வம், இந்த 'நான்' என்னும் உணர்வுக்கு ஒரு விதக் கடினத்தன்மையையே வழங்குகிறது. 'அமானுஷ்யமானவற்றைத் தெரிந்தவன்' என்ற ஆணவத்தையே வழங்குகிறது. மனதைப் பொறுத்த அளவில் நாம் ஒரு குழந்தையாகிவிடவேண்டும். நாம் ஒன்றுமற்றவனாகிவிடவேண்டும். வெளிச்செயலைப் பொறுத்த அளவில், நாம் ஓர் அறிஞனாகச் செயல்படவேண்டும்.

"மதுரையில் ஓர் அன்பர் தனது அனுபவத்தைக் கூறுவார். அவருடைய நண்பருக்கு ஆபத்து ஏதாவது ஏற்படும் பட்சத்தில் அது இவருக்கு முன்கூட்டியே தெரிந்துவிடும். அதை அந்த நண்பரிடம் தெரிவித்து எச்சரிக்கை செய்தால், அந்த நண்பருக்கு அந்த ஆபத்து ஏற்படாமல் போய்விடும். ஆனால் அந்த ரகசியத்தை வெளியே சொன்ன குற்றத்துக்காக இவருடைய உடலில் பாதிப்பு ஏதாவது ஏற்பட்டுவிடும். சொல்லாமல் விட்டுவிட்டாலோ, அந்த நண்பருக்கு அந்த ஆபத்து ஏற்பட்டுவிடும். இவருக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. வெளியே சொன்னாலும் பிரச்சினை; சொல்லாவிட்டாலும் பிரச்சினை...

"அமானுஷ்யமான சக்திகளுக்கு ஆசைப்படுவது என்பது, பணத்தின் மீது ஆசைப்பட்டு ஒரு வங்கியில் கேசியராகச் சேர்ந்திடுவதைப் போன்றதுதான். வங்கியிலுள்ள பணம் அவரிடம் தான் ஒப்படைக்கப்படும். ஆனால், தான் விரும்பியவாறு அதனை அவரால் கையாளமுடியாது. தனது சொந்த தேவைக்கும் எடுத்துக் கொள்ள முடியாது; தான் விரும்புபவர்களுக்கும் கொடுக்கமுடியாது. நீங்கள் அமானுஷ்யமான ஆற்றல் பெற்றீர்களானால், மக்கள் அனைவரும், தங்களுக்கு வேண்டியதைக் கேட்டு உங்களைத் துரத்த ஆரம்பித்துவிடுவார்கள். ஆன்ம ஞானத்தைத் தேடுபவர்கள் உங்களையும் புறக்கணித்து விடுவார்கள்; உங்கள் சக்திகளையும் புறக்கணித்துவிடுவார்கள்".

அந்த அன்பர் மேலும் பல கேள்விகள் கேட்டு 'ஞானம் என்றால் என்ன? விடுதலை என்பது எது?' சரியான வாழ்வு என்பது என்ன?' எனப் பல விபரங்ளையும் கேட்டு தெரிந்து கொண்டார். பிறகு அவரைப் பற்றிய வேறு சில செய்திகளைக் குறிப்பிட்டார். அவர் தனது பள்ளி

இறுதித் தேர்வில் மாநிலத் தரவரிசையில் தேர்ச்சியடைந்து உயர்கல்விக்கான வாய்ப்புக்கள் பலவற்றுடன் இருந்திருக்கிறார். ஆனால் அவர் தனது அமானுஷ்ய ஆர்வம் காரணமாக அவை அனைத்தையும் இழந்து விட்டதாக ஆதங்கப்பட்டார். தேவையற்ற ஆசைகளைக் கிளறிவிட்டு விட்டதற்காக பிரபலமான சித்தர்கள் மற்றும் சமயப் பெரியவர்களின் பெயர்களைக் குறிப்பிட்டு அவர்கள் மீது வசைமாரி பொழிய ஆரம்பித்துவிட்டார்.

அமானுஷ்யங்கள் பொய்யானவையா?

அமானுஷ்ய அனுபவங்கள் நமக்கு ஏற்படாமல் இருக்கலாம். ஆனால் அந்த அனுபவங்களை அடைந்தவர்களெல்லாம் பொய்யர்கள் அல்லர். அவர்களைப் பொறுத்த அளவில், அவை அனைத்தும் உண்மையே.

அமானுஷ்யத்துக்கும், சமுதாய வாழ்வுக்கும் தொடர்பு ஏதேனும் உண்டா?

உண்மையில் சமுதாயத்தை நெறிப்படுத்தும் பெரும்பங்கு, அமானுஷ்யத்துக்கு மட்டுமே உண்டு.

சராசரி மனிதனுடைய அணுகுமுறையானது, சுயநலத்துக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுப்பதாக உள்ளது. தன்னுடைய மற்றும் தனது குடும்பத்தினரின் இன்பத்துக்காக எத்தகைய விதிமுறைகளையும் மீறும் மனப்பான்மை அனைவருக்குமே உள்ளது. அமானுஷ்யங்களைக் கண்டு அச்சமடைந்தோ அல்லது ஆச்சரியப்பட்டோதான் ஒரு சராசரி மனிதன் தனது வாழ்க்கையை நெறிப்படுத்திக்கொள்கிறான்.

தன்னைமீறிய அமானுஷ்ய சக்திகளும் இருக்கின்றன என்னும் எண்ணம் பலருக்குத் தேவைப்படுகின்றது. ஆனால் இது வெறும் அடிப்படை மட்டுமே. அமானுஷ்யங்கள் மீது ஆசைகொண்ட பலர் மனப்பேதலிப்புக்கும் உள்ளாகிவிடுகின்றனர். எங்கோ ஒரு சிலர் மட்டுமே சில அமானுஷ்ய சக்திகளை அடைகின்றனர்.

அமானுஷ்ய சக்திகள் பெற்ற பலரும் தலைமறைவு வாழ்க்கையே வாழவேண்டிய கட்டாயத்துக்குள் தள்ளப்பட்டுவிடுகின்றனர். ஏனெனில் அவர்களைச் சுற்றிலும், நோயாளிகளும், உலக இன்பங்களை வேண்டுவோரின் கூட்டமும் மட்டுமே இருக்கும்.

ஆனால் அந்த அமானுஷ்ய சக்தி பெற்றவர்களோ, இயற்கையின் கட்டுப்பாடுகளை மீறி அவற்றைப் பயன்படுத்திவிடவும் முடியாது.

அன்பர் ஒருவருக்குச் சில அமானுஷ்ய செய்திகளை அறியும் ஆற்றல் ஏற்பட்டிருந்தது. ஒருமுறை சேலம் சென்றிருந்தபோது அந்த அன்பரும் உடன் இருந்தார். அப்போது சேலத்தைச் சேர்ந்த இன்னுமொரு அன்பர் சிலவாரங்களுக்கு முன்னால் சாலை விபத்தில் சம்பவ இடத்திலேயே இறந்துவிட்ட செய்தி தெரிவிக்கப்பட்டது. அந்நிலையில் நம்முடனிருந்த இந்த அன்பர், "இறந்துபோனவர் மீண்டும் குழந்தையாகப் பிறந்து மூன்று நாட்கள் ஆகின்றன", என்று கூறினார்.

அவர் அப்படிக் கூறியதிலிருந்து ஒருவார காலத்துக்கு, அதாவது இரண்டு கண்களிலிருந்தும் கண்ணீர் கொட்டிக்கொண்டிருந்தது. பிரபஞ்ச ரகசியத்தை வெளியே சொன்ன குற்றத்துக்காக இயற்கை அமைப்பிலிருந்து அவருக்கு அத்தகைய தண்டனை கிடைத்துவிட்டதாக அவர் அதுபற்றிக் கூறினார்.

இப்படி சிலவற்றை இரகசியமாக வைத்துக்கொள்ளவேண்டிய கட்டாயம் அவர்கள் மீது சுமத்தப்பட்டுவிடுகிறது.

சமீபத்தில் அன்பர் ஒருவர், அமானுஷ்ய சக்தி பெற்ற சிலருக்கு நேர்ந்த சம்பவம் பற்றிக் குறிப்பிட்டார்.

அவர் ஒரு சித்தர். 100 வயதுக்கும் மேலாக வாழ்ந்தவர். அவர் அபூர்வமான தங்கபஸ்பம் ஒன்றைக் கண்டு பிடித்திருந்தார். அதைத் தனக்குக் கொடுக்குமாறு சமுதாயத்தில் மிகப் பிரபலமான ஒருவர் (பெயரைக் கூற மறுத்துவிட்டார்) அவரிடம் வற்புறுத்தியிருக்கிறார். இந்த சித்தர் தரமறுத்ததும் அவரை அடித்து உதைத்து, அவரை மலத்தைச் சாப்பிடச்சொல்லிக் கட்டாயப்படுத்தி சாப்பிடவைத்து விரட்டி அடித்து அனுப்பியிருக்கின்றனர்.

இன்னுமொரு சித்தர், நவபாஷாணங்களைப் பயன்படுத்தி சிலை செய்திருக்கிறார். அவரிடமிருந்து அந்தச் சிலையைப் பெற அவரைக் கொலை செய்யவும் முயன்றிருக்கின்றனர்.

தங்களது அமானுஷ்ய சக்தியைப் பயன்படுத்தி, அவர்களால் அந்த வன்முறையாளர்களைத் தண்டிக்கவும் முடியாது.

அமானுஷ்யங்களை அறிந்த பலர், தங்களைக் காப்பாற்றிக்கொள்ள பைத்தியக்காரர்களைப் போன்று கூட நடந்துகொள்ள வேண்டியதிருக்கிறது; தலைமறைவாக வாழ வேண்டி இருக்கிறது.

அமானுஷ்யங்களின் மீது ஆர்வம் ஏற்பட்டதன் மூலம் பலர் ஆன்மீகத்துக்குள் நுழைந்திருகின்றனர். அது நுழைவாயிலாக இருக்கும் பட்சத்தில், மிகவும் அவசியமானது. அதற்காகவே வாழ்க்கையை அர்ப்பணிப்பது என்பது வீண்வேலை, ஆபத்தானதும் கூட.

சராசரி மனிதனாக வாழ்ந்து, உழைத்துப் பொருளைச் சேர்த்திருக்கும் பட்சத்தில் அதனைக்கூட தாம் விரும்பிவாறு, கஷ்டப்பட்டவர்களுக்கெல்லாம் கொடுக்கலாம். ஆனால் இயற்கையின் விதிமுறைகளை மீறி நமது அமானுஷ்ய சக்திகளைக் கொண்டு எவருக்கும் உதவி செய்யமுடியாது. எவருடைய துன்பத்தையும் நீக்கமுடியாது.

மரணமே ஏற்படாமல் உடலோடு சாஸ்வதமாக வாழமுடியும் என்று சிலர் ஆர்வம் காட்டி வருகின்றனர். அதில் அவர்கள் மிகவும் பிடிவாதமாகவும் இருக்கின்றனர். இதுவும் நல்ல ஆரம்பமே; நல்ல முடிவு அல்ல. அமிர்தமேயாயினும் அளவோடு இருப்பதே சிறப்பாகும். ★

**சென்னையில் ஐயாவைச் சந்திக்கும் முகவரி :**

**ஸ்ரீ பகவத்,** கதவு எண். பழைய எண். 107, (புதிய எண் : 77) நித்தியானந்தன் தெரு, வாசுதேவன் நகர், (காசி தியேட்டர் பின்புறம்), ஜாபர்கான்பேட்டை,. (அசோக் நகர்), சென்னை-600083. செல் : 99442-15677

## ?கேள்வி பதில்¿

கேள்வி : எந்த விதமான ஆன்மீகப் பயிற்சி முறைகளிலும் ஈடுபடாத, ஆன்மீக நூல்கள் எதையும் படிக்காத, ஆன்மீக அனுபவம் எதுவும் இல்லாத சாதாரணமாக வாழ்க்கையை வாழ்ந்து வருபவர்களுக்கு இந்த புரிதல் சாத்தியமா? எளிமையாகப் புரியும்படி விளக்கவும்.

பதில் : ஆன்மீகத்தில் ஆர்வம் உடைய எல்லோரும் கேட்கும் பொதுவான கேள்வி இது. இந்தக் கேள்விக்கான காரணம் ஆன்மீக அனுபவமே இல்லாதவர்களும் வாழ்வில் உயர வேண்டும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடே. நான் நடைமுறை வாழ்வில் சந்தித்த ஓர் உண்மை சம்பவத்தை இங்கே தெரியப்படுத்துகிறேன். என்னுடைய நண்பரின் நண்பர் ஒருவர் அந்த நண்பரின் வாழ்வில் நடந்த நிகழ்ச்சியைத் தான் இப்போது உங்களுக்குத் தெரிவிக்கிறேன். அவர் ஓர் இளைஞர். திருமணம் ஆனவர், அவர் எப்போதும் Latest design ஆடை உடுத்திக்கொண்டு ஜாலியாக இருப்பவர். அவருக்குப் பிடித்த சினிமா Hero வின் படம் என்றால் முதல் நாள் முதல் காட்சியே பார்த்து விடுவது வழக்கம். எதைப்பற்றியும் பெரிதும் அலட்டி கொள்ளாமல் ஜாலியாக நண்பர்களுடன் சேர்ந்து ஊர் சுற்றிக் கொண்டு இருப்பவர். அவர் எந்த விதமான ஆன்மீகப் பயிற்சியிலும் ஈடுபடவில்லை. ஆன்மீக நூல்கள் எதுவும் படித்ததில்லை. கோயில்களுக்குக் கூட அதிகம் சென்றதில்லை.

மிகவும் ஜாலியாக போய்க்கொண்டிருந்த வாழ்க்கையில் அவரது நெருங்கிய நண்பர் ஒருவர் 32 வயதில் Heart Attack ல் உயிர் இழந்தார். அந்த நண்பரின் மரணம் இவருக்கு மிகுந்த மரண பயத்தை ஏற்படுத்தியது. தனக்கும் அதே போல் Heart Attack ஏற்பட்டு நாமும் இறந்து விடுவோம் என்ற மரண பயம் இவரது மனதில் ஆழமாக பதிந்தது. அப்போது இருந்தே மகிழ்ச்சி தொலைந்து, மனம் எப்போதும் மரணபயத்தைப் பற்றியே நினைத்துக்கொண்டு இருந்தது. தூக்கம் இல்லை, மன அமைதி இல்லை, எப்போதும் அதே மரண பயம்.

அந்த மரண பயத்தை போக்குவதற்காக மனதை divert செய்வதற்காக, T.V. யில் அவருக்குப் பிடித்த HERO படம் ஒன்றை முழுவதுமாகப் பார்க்கிறார். பார்த்து முடித்த பிறகு தூங்கலாம் என்றால், இவரது தூக்கத்திற்கு முன்பாக அதே மரணபயம் வந்துவிடுகிறது. உணவு சாப்பிடும் அளவு குறைகிறது. அசைவ உணவை அவரே குறைக்கிறார். ஒரு Dr. M.D. Cardiology ஐ சந்தித்து தனக்கு Heart Attack ஏற்பட வாய்ப்பு உள்ளதா என Consult செய்கிறார். Dr ம் Echo Test முதல் Cholesterol Test என எல்லா விதமான Heart Attack க்கான Test களும் செய்கிறார். Result எல்லாவற்றிலும் Normal தான். Dr. மன பயம் தான் பிரச்சினை, Heart Attack பற்றி ஒன்றும் பயப்பட வேண்டாம் எனக் கூறி Sleeping Dose, Vitamin Tablets சிலவற்றை எழுதிக் கொடுக்கிறார்.

ஆனாலும் இவர் மனம் அமைதி அடையவில்லை. மனதில் இருக்கும் பயத்தைப் போக்க Homopathy Doctor ஒருவரைச் சந்தித்துத் தனக்கு ஏற்பட்ட மரணபயத்தைத் தெரிவித்து மருந்துகளை உட்கொள்கிறார். ஆனாலும் மரணபயம் குறையவில்லை. எப்படியாவது அந்த மரண பயம் நீங்கவேண்டும் என்று கோயில்களுக்குச் செல்கிறார். ஆனால் அங்கு "உன்னுடைய பாவப் பதிவுகள் தான் இதற்குக் காரணம்" எனப் பெரியவர்கள் கூறுகிறார்கள். மனம் மேலும் குழப்பமடைகிறது. மகிழ்ச்சியாக இருந்த அவர், இப்போது சரியாக சாப்பிடமுடியாமல், எந்த வேலையையும் கவனத்துடன் செய்யமுடியாமல், கவலையுடன் தூக்கமின்றி, அமைதி இழந்தும் இருந்தார்.

இந்த நிலையில் தான் அவர் தனது Office-ல் நான் எப்போதோ என்னுடைய நண்பருக்குக் கொடுத்த **"கவலைகள் அனைத்திற்கும் தீர்வு"** என்ற புத்தகத்தைப் பார்க்கிறார். நமக்கு மரணபயத்தைப் பற்றிய கவலை தான் எப்போதும் இருக்கிறதே என அந்தப் புத்தகத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கினார். கிட்டத்தட்ட 4 மணி நேரத்தில் புத்தகம் முழுவதுமாகப் படித்து முடித்து விட்டார். என்னவென்று விளக்கமுடியாத ஒரு மன அமைதி ஏற்படுகிறது. திரும்ப மாலை ஒருமுறை, இரவு ஒரு முறை என இரண்டுமுறை அதே புத்தகத்தைத் திரும்பத் திரும்பப் படிக்கிறார். அவரது மனம் அதுவரை மரண பயத்தைப் பற்றியே எண்ணிக்கொண்டு இருந்தது. ஆனால் இப்போது மரணபயம் என்பது, 'தானாக வருவது', நான் உருவாக்கியது இல்லை. அவை தானாக ஏற்படுவது, அந்தப் பயத்தைப் அகற்ற நம் முயற்சி ஒன்றும் உதவாது எனப் புரிந்து கொள்கிறார். பயம் என்பது அதுவாக வருவது. நாம் அந்தப் பயத்தைப் பற்றி ஒன்றும் கண்டு கொள்ளவில்லை என்றால் அந்தப் பயமும் தானாக சென்றுவிடுகிறது என்பதைக் கண்டுபிடிக்கிறார். எப்போதும், மரணபயத்திற்கு நாமாக ஒன்றும் செய்யமுடியாது என்பதைத் தெளிவாகப் புரிந்துகொண்டார்.

சில மாதங்களில் மன இறுக்கம் கலைந்து வழக்கம்போல் தன்னுடைய எல்லா வேலைகளையும் செய்யத்தொடங்கினார். பழைய சினிமாப் படங்கள் இதுவரை பார்த்திராத இவர் இந்தக் காலக்கட்டத்தில் செல்வச் செழிப்பிலிருந்து விடுபட்டு ஆண்டியாக மாறிய 'பட்டினத்தார்' படம், காமத்திலிருந்து விடுபட்டு முருக பக்தனாக மாறிய 'அருணகிரிநாதர்' படம், கிருஷ்ண பக்தராக மாறிய 'ஹரிதாஸ்' படம் என, பழைய காலத்து ஆன்மீகப் படங்கள் பலவற்றையும் பார்த்ததாகக் கூறினார். மேற்கண்ட படங்களில் கதாநாயகனுக்கு ஓர் இடத்தில் முக்கிய திருப்பம்

ஏற்பட்டுள்ளதைப் புரிந்து கொண்டதாகக் கூறினார். அவர் நேரில் என்னைச் சந்தித்து "கவலைகள் அனைத்திற்கும் தீர்வு" படித்ததையும் அதனால் ஏற்பட்ட அனுபவத்தையும் தெரிவித்தார். நான் அவரிடம் "நீங்கள் என்ன புரிந்து கொண்டீர்கள் என்று கூறமுடியுமா?" எனக் கேட்டேன். அவர் "Life ல் Settled என்பது எப்போதும் இல்லை என்பதை புரிந்து கொண்டேன்" எனக் கூறினார். நான் அவரிடம் "ஞானவிடுதலை" புத்தகத்தையும் கொடுத்து இதையும் படித்துப் புரிந்துகொள்ளுங்கள் எனக் கூறினேன். அவர் 2 நாட்கள் கழித்து "ஞான விடுதலை" புத்தகத்தைத் திருப்பிக் கொடுத்தார். "நான் ஞானவிடுதலை படிக்கவில்லை எனக்குக் கவலை தீர்வே போதும், எனக்கு வேறு எதுவும் வேண்டாம்" என முடித்துக்கொண்டார்.

இங்கு நடந்தது என்ன? மனதில் மரணபயம் ஏற்படுவதற்கு நாம் ஒன்றும் செய்யமுடியாது என்பதைப் புரிந்து கொண்டதால், நமது மனம் எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்ளும், புது பரிமாணத்திற்கு வந்துவிடுகிறது. இப்படிப் புரிந்து கொள்வதால் தானாகவே மனதில் ஓர் அமைதி ஏற்படுகிறது. ஞானநிலை என்பது எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்ளும் தன்மை, எல்லாவற்றிலிருந்தும் கடந்து போகும் நிலை, இதே தன்மை தான் மரண பயத்தின் மூலம் புரிந்து கொண்டவருக்கும் ஏற்பட்டது. இங்கே ஞானநிலையில் புரிந்து கொள்பவருக்கும், தனக்கு ஏற்பட்ட மரண பயத்திலிருந்து புரிந்து கொண்டவருக்கும் எந்த வேறுபாடும் கிடையாது. இதையேதான் ஞானநிலை என்று ஆன்மீகத்தில் உள்ளவர்கள் கூறுகிறார்கள், ஆனால் பயத்தை எதிர்கொண்டவருக்குத் தான் இருப்பது ஞானநிலைதான் என்பது தெரியாமல் இருந்து வருகிறார். அவ்வளவு தான் வேறுபாடு.

"நமக்கு ஏற்படும் துன்பங்கள் எல்லாம் நாம் அவற்றிலிருந்து விடுதலை ஆவதற்கே எனப் புரிந்து கொண்டால் போதும்"

திரு. V.A. P. சரவணன்
சேலம். செல் : 9994205880

# பாதையில் மலர்ந்த மலர்கள்

மனம் நிறைந்த தத்துவ ஞானியும் - மனம் கவர்ந்த இறை ஞானியும்

1990-ல் இருந்து கடந்த 22 ஆண்டுகளாக வேதாத்திரி மகரிஷியின் சீடனாக வேதாத்திரியத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டு, பல பயிற்சிகளைப் பெற்று தற்போது மனவளக்கலை பேராசிரியராகவும், வேத ஒளி மாத இதழின் ஆசிரியராகவும் தொண்டாற்றி வருகிறேன்.

மகரிஷியின் தத்துவங்களைக் கற்றுத் தேர்ந்து வாழும் நிலை உணர்ந்து தொண்டாற்றி இன்பம் கண்டு வருகிறேன். வாழ்வில் மனநிறைவும் அமைதியையும் பெற்று வாழ வழிகாட்டிய வேதாத்திரி மகரிஷி அவர்கள் என் மனதில் என்றும் நிறைந்தவர் ஆவார்.

நான் எங்கு சென்றாலும் எனது கையில் ஒரு புத்தகம், பையில் ஒரு புத்தகம் இருக்கும். புத்தகம் படிப்பது சிறுவயதில் இருந்தே எனக்கு மிகவும் பிடித்தது. எந்தப் புத்தகத்தைப் படித்தாலும் ஒரு பத்து பக்கம் வரை படித்ததும் அதை மூடி வைத்து விட்டு படித்ததை மனதில் அசை போடுவேன். பிறகு மீண்டும் படிப்பைத் தொடருவேன்.

எனது வாழ்நாளில் நான் ஒரே மூச்சில் தொடர்ந்து படித்து முடித்த ஒரே புத்தகம் இறைஞானி பகவத் ஐயாவின் **"ஞான விடுதலை"** என்ற புத்தகம் தான். அதனால் தான் என் மனதைக் கவர்ந்தவர் இறைஞானி எனக் குறிப்பிட்டேன்.

ஞானவிடுதலையைப் படித்த பிறகு எனக்குள்ளே ஒரு வெளிச்சம் இருப்பதை உணர்ந்தேன். இது தான் ஆன்ம ஜோதியோ என்று நினைத்தேன். உள் ஒளி பூரித்தது போன்ற உணர்வு ஏற்பட்டது.

சூரியன் ஒரு மிகப்பெரிய நட்சத்திரம். சூரியன் வெப்பத்தைத் தரக்கூடியது. சந்திரனுக்கு சுய ஒளி கிடையாது. சூரிய ஒளியே சந்திரனில் பிரதிபலிக்கிறது. சந்திரனில் பட்ட சூரிய ஒளி குளிர்ச்சியாக உள்ளது. அதுபோலத் தான் பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்றே. ஆத்மா அழிவற்றது என்பதை உணர வைத்து ஆன்மீக வழிகாட்டியாக உள்ள இறைஞானி பகவத் ஐயா அவர்கள் என் உள்ஒளியைப் பெருக்கியவர் ஆவார்.

வேதாத்திரி மகரிஷியும் இறைநிலை வேறு நீ வேறு இல்லை என்பதை 'அவனில் நீ உன்னில் அவன். அவன் யார் நீ யார் பிரிவேது',... என்கிறார்.

பகவத் ஐயாவும் இதே கருத்தில் 'இறைநிலையை அடைவது என்பதே இறைநிலை உணர்வுக்குத் தடையாக உள்ளது. எல்லாமே இறைநிலையின் அம்சமே. நாமே இறைநிலையாகவே இயங்கிக் கொண்டு இறைநிலையைத் தேடினால் எப்படி அடையமுடியும்' என்கின்றார்.

இவ்விரு கருத்தையும் பார்க்கும்போது மகரிஷியையே வேறு பரிமாணத்தில் காண்பதுபோல் பகவத் ஐயாவைக் காண்கிறேன்.

மனம் தெளிவு பெறவும் அமைதியை அடையவும் பகவத் ஐயாவின் எளிய முறை விளக்கங்கள் எனக்கு மிகவும் உதவியாக இருந்தது. நன்றி. வாழ்க வளமுடன்!

பேராசிரியர் ஞானப்பிரகாசம்
வேத ஒளி மாத இதழ் ஆசிரியர்,
இளம்பிள்ளை.

## அதிசுலபம்! அய்யே அதிசுலபம்!! ஆரோக்கியமாய் வாழ்வது அதிசுலபம்!!!

நமக்கு உடல் இருக்கிறதா? இல்லையா? என்று கேள்வி கேட்கும் அளவிற்கு நம் உடல் இலேசாக இருந்தால் அது ஆரோக்கியம். ஆம், நல்ல ஆரோக்கியத்தில் நம் உடலும் மனமும் இருப்பதே தெரியாத அளவிற்கு அது இலேசாக இயல்பாக இயங்கிக் கொண்டிருக்கும்.

நம் விரலில் அடிபட்டுவிட்டால் மனம் அடிபட்ட விரலையே சுற்றி வந்து கொண்டிருக்கும். அப்போது அப்பகுதி கனமாகவும் அடிக்கடி, நினைவு கொள்ள வேண்டியும் இருக்கும். அடிபட்ட காயம் ஆறியவுடன் மனம் அதை மறந்துவிடும். எப்போதாவது நீங்கள் கவனித்திருப்பீர்கள்... ஒரு குழந்தை கீழே விழுந்து விடுகிறபோது, யாரும் கவனிக்காமல் இருந்தால் தானாகவே எழுந்து துடைத்துக் கொண்டு போய்க்கொண்டே இருக்கும். ஆனால் யாராவது பார்த்துவிட்டால் தேம்பித் தேம்பி அழும். அதுபோலத்தான் நாம் புறவாழ்க்கையின் நிகழ்வுகளையும் அக உணர்ச்சிகளையும் தானாக நடக்க அனுமதித்தால் விரைவில் ஓடி அடைந்து தீர்ந்துவிடும். அவ்வாறு அனுமதிக்காமல் நம் மனதுக்குள் சுவீகரித்துக்கொண்டு சரி செய்யப் போராடும்போது உடல் மற்றும் மனம் கனத்துப்போய் துன்பப்படுகிறது.

நம் உடலோ அல்லது மனமோ அடிபட்டுவிட்டால் அந்தக் காயங்களை நோக்கியே நம் முழு ஆற்றலும் பாயும். இது நமக்கு நன்கு தெரிந்தது தான். அதுபோல அக உணர்ச்சிகளையும் தானாக நடக்க அனுமதிக்காமல் நாம் கையில் எடுத்துக்கொள்கிறபோது அவை தேக்கமடைந்து நமக்கு மனத்துன்பமாகவும், உடல் நோயாகவும் மாறுகின்றன. உங்களுக்கு ஓர் இரகசியம் தெரியுமா? "ஒரு புண்ணுக்கு மருந்து போட்டால் அது ஆறுவதற்கு ஆகும் காலத்தைவிட, அதைத் தொந்தரவு செய்யாமல் விட்டுவிட்டால் இயற்கையாக ஆறுவதற்கு ஆகும் காலம் குறைவு". ஆனால் புண்ணைப் பற்றிய பயம், அதைப் பற்றி நாம் தெரிந்து வைத்திருக்கும் கருத்துக்கள், மருந்துகள் மற்றும் அதை எதிர்த்துப் போராடும் முயற்சிகள் போன்றவையும் நம் புண்ஆறுவதைத் தாமதப்படுத்துகின்றன. அதுபோலத்தான் கடந்தகால மனக்காயங்களை மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்ப்பதும், அக உணர்ச்சிகளை நாம் கையில் எடுத்துக் கொண்டு சரிசெய்ய முற்படுவதும் நாம் ஞானம் அடைதலைத் தாமதப்படுத்துகின்றன.

நடந்தது நடந்தது தான்; முடிந்தது முடிந்தது தான்... அதை மாற்றி அமைக்க முடியாது என்பதைப் புரிந்துகொண்டு அதனோடு முரண்படாமல் அதை ஏற்றுக்கொள்ள ஆரம்பித்தால் மனம் இலேசாகிவிடும். மனம் இலேசாகிவிட்டால் உடலும் புத்துணர்வோடு இருக்கும். இயற்கை தான் பெரியது என உணர்ந்து சரணாகதி செய்வது மட்டுமே போதுமானது. நீங்கள் பரிபூரண ஆரோக்கியவானாக மாறிவிடலாம்.... எனவே

ஆரோக்கியமாய் வாழ்வதும் ஞானத்தோடு வாழ்வதும் அதிசுலபம் தான்.

Dr. சிவக்குமரன், BHMS.,M.Sc(Psy).,
"Centre for the Man Excellence"
மதுரை-625 010.
செல் : 98424-77482

## ஐயாவுடைய நிகழ்ச்சி

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 22-06-2012 வெள்ளி | அபி திருமண மண்டபம், பாரத் பஜாஜ் ஷோரூம் பின்புறம், அம்மாப்பேட்டை, சேலம்-3. | **கவலைகள் அனைத்திற்கும் தீர்வு** மாலை 5-30 to 7-30 மணிவரை | Dr. N. கைலாசம் - 94432-90559<br>K.S. ஜீவமணி - 97891-65555<br>V.A.P. சரவணன் - 99942-05880 |
| 23-06-2012 சனி | மல்லேஸ்வரம் அசோசியேசன் கிளப், மல்லேஸ்வரம், பெங்களூரு. | **தன்னை அறியும் ஞானம்** மாலை 5 to 8-30 மணிவரை | திரு. சம்பத்குமார் - 96863-48007 |
| 24-06-2012 ஞாயிறு | கிருஷ்ணகிரி | **ஞானம் மிகவும் எளிது** மாலை 6 to 8 மணிவரை | திரு. சந்திரசேகர் - 94435-12084 |
| 25-06-2012 திங்கள் | சேலம் அம்மாப்பேட்டை அறிவுத் திருக்கோயில், அம்மாப்பேட்டை, சேலம்-3. | **எளிமையாக்கப்பட்ட ஞானம்** மாலை 3 to 5 மணிவரை | Dr. N. கைலாசம் - 94432-90559<br>K.S. ஜீவமணி - 97891-65555<br>V.A.P. சரவணன் - 99942-05880 |

## 06-07-2012 முதல் 26-07-2012 வரை மலேசியா

ஏற்பாடு : ஹீலர் பாஸ்கர் மற்றும் வெண்ணிலா கனகசுப்புரத்தினம், செல் : +60126646107

## கடிதம்

திரு. ஜீவமணி அவர்களுக்கு,

அம்பத்தூரில் கடந்த 13-5-2012 அன்று நடைபெற்ற கூட்டத்தில் திரளானவர்கள் கலந்துகொண்டனர். “தன்னை அறியும் ஞானம்” என்ற தலைப்பில் “ஐயா” அவர்கள் ஆற்றிய உரையை நன்கு விரும்பிக் கேட்டனர். உண்மையில் உரை முடிவுவரை எல்லோரும் அமர்ந்திருந்தது மட்டுமல்ல, கவனமாகவும் கேட்டனர். ஞானம் என்ற தலைப்பில், சென்னையின் இப்பகுதியில் நடந்த முதல் கூட்டமாக இருந்தபோதிலும் நாங்கள் முழுமையாகத் திருப்தி அடைந்தோம். இதுபோன்று கூட்டங்களை மீண்டும் நடத்தி இந்தச் செய்தியைப் பரப்பவேண்டும் என்று நாங்கள் எண்ணியுள்ளோம்.

பல பள்ளிகளில், மாணவர்களுக்காக ஐயா உரையாற்றுவதற்குத் தேவையான ஏற்பாடுகளை நாங்கள் ஏற்கனவே செய்துள்ளோம். திரு. A.B.N. செல்வராஜன், ஓஷோ ராஜேந்திரன், திரு. தரணிதரன் மற்றும் உங்களது ஒத்துழைப்புக்கு நன்றி.

அன்புடன்,
**சுகுமார் ஸ்ரீனிவாசன்,**
**T. M. K. தியாகராஜன்,**
**M. K. சம்பந்தம்,**
அம்பத்தூர் குழு.





## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதையின் பயணத்தில் இதழின் தரம் நாளுக்கு நாள் மெருகேறி வருவதாக வரும் பாராட்டுக் கடிதங்கள் நமக்கு மன நிறைவைத் தருவதாக இருக்கிறது. தற்போது பகவத் ஐயாவின் நிகழ்ச்சிகள் அதிகரித்துக்கொண்டே வருகின்றன. பல ஊர்களிலும் உள்ள அறிவுத்திருக்கோயில்களில் ஐயாவின் சிறப்புரைகள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன.

பலகாலமாக ஞானம் என்பதும் முக்தி என்பதும் ஒரு மறைபொருளாகவே இருந்து வந்துள்ளது. ஞானம் என்பது ஆயிரத்தில் ஒருவர், கோடியில் ஒருவர் என யாரோ ஒருவருக்குதான் கிடைக்கும் என்ற நிலையை மாற்றி ஆர்வமுள்ள அனைவருக்கும் கிடைக்கும் வகையில் மிக எளிமையாக்கிக் கொடுத்துவருகிறார் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

மனதின் இயக்கத்தை முழுமையாகப் புரிந்துகொள்வதுதான் ஞானம், அதை நாமாகத்தான் முயன்று புரிந்துகொள்ள வேண்டும். முக்தி (விடுதலை) என்பது தானாக வருவது. அது புரிந்துகொள்வதின் விளைவாக வருவது. ஐயாவின் நூல்கள் அனைத்திலும் கூறப்படும் உண்மை ஒன்றுதான். ஆனால் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கோணத்தில் கூறப்பட்டுள்ளது, வெவ்வேறு அணுகுமுறையில் அணுகப்பட்டுள்ளது. எல்லாப் புத்தகங்களையும் படிப்பதன் மூலம் எல்லா கோணத்திலும் உண்மையை அணுகி சந்தேகம் இல்லாமல் தெளிவடையமுடியும். மேலும் ஒரு முறையாவது ஐயாவின் சிறப்புரையை நேரடியாகக் கேட்க வேண்டும். அத்தோடு இல்லாமல் ஐயாவை நேரில் சந்தித்து உரையாடி உங்கள் ஐயங்களை தெளிவுபெறுவதன் மூலம் உங்களை நீங்களே புரிந்து கொள்ளலாம். உங்களை நீங்களே புரிந்துகொள்வதுதான் ஞானம். இவ்வாறு கிடைக்கும் ஞானம் உங்களுக்கே சொந்தமானதாகிவிடும். நீங்களே உங்களுக்குச் சுய ஒளியாகிவிடுவீர்கள்.

இதைத்தான் வள்ளுவர்

ஐயப்படா அது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். (குறள் 702)

எனக்கூறுகிறார். இந்த ஞானத்தால் ஏற்படும் முக்தியே நமது அனைத்து பிரச்சினைகளுக்கும் நிரந்தரத் தீர்வாகும்.

எனவே தற்போது ஐயா சென்னையில் தங்கியிருப்பதால், இந்த வாய்ப்பை அனைவரும் பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555

# ஜென்கதை

## விழிப்பு (அ) கவனம்

புத்தர் தம் மாணவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார்.

முன் வரிசையில் மன்னன் ஒருவனும் அமர்ந்திருந்தான். அவன் அடிக்கடி புத்தரின் மொழிகளைக் கேட்பது வழக்கம்.

மன்னன் தரையில் அமரவேண்டியிருந்தது. யார் வந்தாலும் அப்படித்தான். அங்கே யாருக்கும் தனியாசனம் கிடையாது. மன்னனுக்குத் தரையில் அமர்ந்து பழக்கமில்லை. உட்கார முடியாமல் மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந்தான். இப்படியும் அப்படியும் சாய்ந்தும், காலை மாற்றிப் போட்டு மடக்கி அமர்ந்தும், நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தான்.

அதே சமயம் தான் சிரமப்படுவது புத்தருக்குத் தெரியாமலிருக்கவும் முயற்சி செய்து கொண்டிருந்தான். இந்தப் போராட்டத்தில் அவனை அறியாமல் ஒரு காரியம் நடந்து கொண்டிருந்தது.

புத்தர் அதைக் கவனித்து விட்டார். உடனே தம் பேச்சை நிறுத்தினார். "ஏன் அப்படி உன் கால் கட்டை விரல் ஆடிக்கொண்டிருக்கிறது?" என்று கேட்டார். மன்னன் திடுக்கிட்டுக் குனிந்து தன் காலைப் பார்த்தான். பார்த்தவுடன் ஆட்டம் நின்று விட்டது

அது அனிச்சை செயலாக நடந்தது, அவரது கவனம் இல்லாமல் நடந்தது, கவனம் வந்ததும் நின்றுவிட்டது.

அதைக் கவனித்த புத்தர், "ஏன் விரல் ஆட்டுவதை நிறுத்திவிட்டாய்?" என்று கேட்டார்

"பெருமானே, என்னைச் சங்கடமான கேள்வி கேட்டுவிட்டீர்கள். அது ஆடிக்கொண்டிருந்தது எனக்குத் தெரியவே தெரியாது. நீங்கள் கேட்டதும் அது தானாக நின்றுவிட்டது. நான் ஒன்றுமே செய்யவில்லை. ஆட்டவும் இல்லை; நிறுத்தவும் இல்லை", என்று மன்னன் சொன்னான்..

அதைக் கேட்ட புத்தர் தம் சீடர்களை நோக்கி பேச ஆரம்பித்தார்.

"விஷயம் என்ன என்று கவனித்தீர்களா? இந்தக் கட்டை விரல் இவருக்குச் சொந்தமானது. இது ஆடுகிறது. ஆனால் இவருக்கு அதைப் பற்றி ஒன்றுமே தெரியாதாம். ஆனால் கேட்டதும் நின்றுவிட்டது. விழிப்புணர்வு தோன்றியதும் நின்று விட்டது. வெறும் விழிப்புணர்ச்சி மட்டுமே தேவை. எல்லாம் அடங்கி விடும்".

**கவனத்திற்கு வராத எதற்கும் நாம் பொறுப்பல்ல! கவனத்திற்கு வந்த பிறகு செயல்படுவதற்கு நாம் மட்டுமே பொறுப்பு!!**



நன்கொடை சந்தா செலுத்த விரும்புபவர்கள், ரூ.100/-க்கான சேலத்தில் செல்லத்தக்க Cheque/DD/MO-வை SRI BAGAVATH MISSION என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

To

*If undelivered please return to:*




**SRI BAGAVATH MISSION**
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**Dr. N. Kailasam : 94432 90559**
**V. A. P. Sharavanan : 99942 05880**
**K. S. Jeevamani : 97891-65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published bu Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.